*Nam nāṭu*

*Malar 5, itaḻ 52 [i.e. 53]*

*August 15, 1957*

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ [illegible] 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஆடி 31௳ வியாழன் (15—8—57) ★ ★ வெளியூர்: ஆடி 32௳ வெள்ளி (16—8—57) [இதழ் 52

## விடுதலை வீரர்கள் ஆயிரம் பேர் பலி!

அல்ஜீரியர்ஸ், ஆக. 14—

கடந்த பத்து நாட்களில் மட்டும் பிரேஞ்சு ஏகாதிபத்திய இராணுவத்தினர் அல்ஜீரிய மக்களில் 1,000 வீரர்களைக் கொன்று குவித்திருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது.

# டெல்லிப் பெரியவர்களின் பிரித்தாளும் சூழ்ச்சி!

## மக்கள் சபையில் கண்டனக் குரல்

### 'பம்பாயை மராட்டியருக்குத் தருவதில் குஜராத்தியருக்கு ஆட்சேபம் இல்லை'

### 'மராட்டியரின் எழுச்சியை அடக்க சதிச் செயல்களில் சர்க்கார் ஈடுபடுவானேன்?'

### 'இரு மொழி பம்பாய் ஏற்பாடு ஒழியவேண்டும்'

புதுடில்லி, ஆக. 14—

"நாட்டின் நலனுக்கு உகந்தது என்றால், பம்பாய் நகரை மராட்டியருக்குத் தந்துவிடுங்கள்; நாங்கள் (குசராத்தியர்) அதற்காகக் கவலைப்படமாட்டோம்; ஆனால், ஒவ்வொரு முறையும் நாங்கள்தான் இதற்குக் குறுக்கே நிற்கிறோம் என்று கூறுதீர்கள்; உடனடியாக இருமொழி பம்பாய் மாநிலம் என்ற முடிவை மாற்றிக்கொள்ளுங்கள்; தனித்தனியாக, மராட்டிய, குசராத்தி மாநிலங்கள் அமையுங்கள்; பம்பாய் பிரச்சினைக்கு நல்லதொரு முடிவு காணுங்கள்; மராட்டியத்துடன் பம்பாய் இணைவதுதான் நாட்டின் நலன் என்றால், நாங்கள் அதற்குத் தயார்; ஆனால், இந்த விவகாரத்தைக் காலங் கடத்திக்கொண்டே செல்லாதீர்கள்; நெருப்பு எரிந்துகொண்டே இருக்க விடாதீர்கள்"

என்று பம்பாயிலிருந்து சுயேச்சை உறுப்பினராகச் சென்றிருக்கும் பி. ஆர். பட்டேல் என்ற குசராத்தி, மக்கள் சபையில் மிக உருக்கமாகப் பேசியிருக்கிறார்.

வழிகளில் அமைதியான போராட்டத்தில் ஈடுபடுவோம்.

"இந்திய யூனியனின் பலம் அதன் அங்கங்களின் பலத்தைப் பொறுத்தது என்பதை காங்கிரஸ் மறந்துவிடக்கூடாது."

குசராத்தி உறுப்பினரான பி. ஆர். படேல் என்பார் பேசுகையில், காங்கிரஸ் சர்க்கார் பிரித்தாளும் சூழ்ச்சியைக் கையாளுவதாகக் குற்றம் சாட்டினார்.

இருமொழி பம்பாய் ஏற்பாடு இன்று மீண்டும் மக்கள் சபையில் கடுந்தாக்குதலுக்கு இரையாகியிருக்கிறது. மராட்டிய குஜராத்தி உறுப்பினர்கள், உடனடியாக இந்த ஏற்பாட்டை ஒழிக்க வேண்டுமென ஆவேசமாகப் பேசியிருக்கின்றனர்.

பம்பாயைச் சேர்ந்த நானுபட்டேல் என்ற மராத்தி உறுப்பினர் பேசியதாவது:—

"கடந்த இரண்டாண்டுகளில் நிகழ்ந்துள்ள பல சம்பவங்கள் மராட்டியரின் உணர்ச்சிகளை அழித்து ஒழிக்கவும், அநீதிக்கு எதிராக அவர்கள் குரல் எழுப்ப முடியாதவாறு செய்யவும்நடைபெறும் சதியினைஅம் பலப் படுத்துவனவாகும். ஏதுமறியாத மக்கள் மீது மிருகத்தனமாக நடத்தப்பட்ட துப்பாக்கிப் பிரயோகத்திற்கு வேறு என்னதான் அர்த்தம் இருக்க முடியும்? 'இவை பற்றி ஒரு நீதிபூர்வ விசாரணை வேண்டும்' என்ற கோரிக்கை கூட மறுக்கப்பட்டு விட்டது. இந்தக் கோரிக்கை ஈடேற்றப்படும் வரையில் எந்த மராட்டியனும் மௌனமாருயிக்க மாட்டான் என்பதை சர்க்கார் நினைவில் கொள்ளட்டும்.

"'மராட்டியருக்குப் பம்பாயைத் தரமுடியாது; ஏனெனில் மராட்டியரும் — குசராத்தியரும் சண்டை போட்டுக்கொள்கின்றனர்' என்று கூறப்படுகிறது. இது, காந்தியாரின் கோரிக்கையை வெள்ளையர்கள், இந்து—முஸ்லீம் ஒற்றுமையின் மையைக் காட்டி ஏற்க மறுத்தவந்தைதப் போலிருக்கிறது. வெள்ளைக்காரர்கள் தானே அந்த வேற்றுமைகளை உருவாக்கியவர்கள்? அதே போலத்தான் இன்று மராட்டியர்களுக்கும் — குசராத்தியர்களுக்கும் இடையே கலகமூட்டுகிறது, காங்கிரஸ் சர்க்கார்;

"பம்பாய் நகரம், பெல்காம்-கார்வார் உள்பட சம்யுக்த மராட்டியம் வேண்டும் என்ற எங்கள் கோரிக்கையை சர்க்கார் ஏற்காவிட்டால், நாங்கள் விரும்பாவிடினும், எங்கள் இலட்சியத்தை அடைவதற்காக ஜனநாயகபூர்வமான

## பயிரிடாத விளை நிலங்களில் கட்டாயமாகப் பயிரிட!

### சென்னை சர்க்கார் உத்தரவு

சென்னை, ஆக. 14—

"பயிரிடக்கூடிய நிலங்களைப் பயிரிடாமல் தரிசாக எவரேனும் வைத்திருந்தால், அவர்களை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள், உணவுப்பொருள் பயிரிட வேண்டுமென எந்த மாவட்ட அதிகாரியும் (கலெக்டர்) கேட்கலாம்"

என்று, சென்னை சர்க்கார் உத்தரவு ஒன்று பிறப்பித்திருக்கிறார்கள்.

"அம்மாதிரி கேட்கப்படும் நிலச்சுவான்தார்கள், தங்கள் நிலங்களைப் பயிரிடத் தவறினால், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அந்த நிலத்தில் பயிரிடும் உரிமையை, ஏலத்தின் மூலம் மாவட்ட அதிகாரி, பயிரிட விரும்புபவர்களுக்குத் தரலாம்"

என்றும் சர்க்கார் வெளியிட்டுள்ள உத்தரவு கூறுகிறது.

அவ்வாறு ஏலத்தில் எடுத்த நபர் தரிசு நிலங்களில் உணவுத் தானியங்களை மட்டுமே பயிரிட வேண்டும். தவறினால் சாகுபடி உரிமை உடனடியாக ரத்து செய்யப்படும்.

## டில்லி நியமித்த அதிகாரி சுறுசுறுப்பு!

### ஆந்திரத்தில் உணவு கொள்முதல்

விஜயவாடா, ஆக. 14—

ஆந்திர மாநிலத்தில் இப்போது தேவைக்கு அதிகப்படியாக $3\frac{1}{2}$ இலட்சம் டன் அரிசி இருப்பதாக மத்திய அரசாங்கம் மதிப்பிட்டுள்ளது.

வடநாட்டில் உள்ள சில மாநிலங்களில் அரிசியை அதிக விலைக்கு விற்க சில ஆந்திர ஆலை முதலாளிகள், அரிசியைக் கொள்முதல் செய்து வைத்திருந்தனர்.

தென் உணவு மண்டலம் ஏற்படுத்தப்பட்டதும் அவர்கள் அவ்வாறு வாணிபம் செய்து இலாபம் பெறுவது தடையாகியுள்ளதாம்.

இப்போது மத்திய அரசாங்கம் நியமித்துள்ள தனி அதிகாரி, 'ஆந்திர மாநிலத்தில் உள்ள 800 அரிசி ஆலை முதலாளிகளும் தங்களிடம் கையிருப்பு உள்ள உணவுத் தானியங்களின் அளவை 24 மணி நேரத்திற்குள் அறிவிக்கவேண்டும்' என்று கூறியுள்ளாராம்.

மேலும் அவர், விஜயவாடாவில் உள்ள சில அரிசி ஆலைகள் தங்களிடம் உள்ள சரக்கை ஒப்படைக்க வேண்டும் என்று அவசர உத்தரவு பிறப்பித்துள்ளாராம்; அதற்கு, அத்தியாவசிய உணவுத் தானியச் சட்டப்படி பணம் மதிப்பிட்டுத் தரப்படுமாம்,

## சிங்கள வெறியர்களை பண்டா திருப்தி செய்துவிட்டார்?

### தமிழரசுக் கட்சியின் செயற்குழு கூடுகிறது

### 'போராடினாலன்றி தன்மானத்தைக் காக்கமுடியாது'

கொழும்பு, ஆக. 14—

பண்டாரநாயகா தங்களுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை மீறும் வகையில் அறிக்கை விடுத்திருப்பதானது, ஒப்பந்தம் முறிந்து போனதாகக் கருதப்படுகிற நிலையை உருவாக்கியிருப்பதால், அந்த நிலை குறித்து விவாதித்து, எதிர்காலத்தில் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் பற்றிச் சிந்திக்க, இலங்கை தமிழரசுக் கட்சியின் செயற்குழு, வரும் ஆக. 24, 25-ந் தேதிகளில் யாழ்ப்பாணத்தில் கூடும் என்று தெரியவருகிறது.

ஒப்பந்தம் பற்றி திங்களன்று பண்டா வெளியிட்டுள்ள அறிக்கையைத் தாம் ஏற்பதற்கில்லை என்று தமிழரசுக் கட்சியின் தலைவர் செல்வநாயகம் கூறியிருக்கிறார்.

கட்சியின் செயலாளரான ஈ. எம். வி. நாகநாதன், 'தமிழர்களின் அரசியல், மொழி உரிமைகளைக் காப்பாற்றுவதற்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து இதர கட்சிகளுடன் தமிழரசுக் கட்சி பேச்சுவார்த்தை நடத்தும்' என்றும், 'தமிழர்கள் போராட்டத்தின் மூலமாக அல்லாமல் இந்த சர்க்காரிடமிருந்து நியாயம் பெற முடியாது—தங்களது கௌரவத்தையும் சுயமரியாதையையும் காப்பாற்றிக் கொள்ள முடியாது' என்றும் கருத்தறிவித்திருக்கிறார்.

இதற்கிடையில், சிங்கள வெறியர்கள் பண்டாவின் அறிக்கை கண்டு மகிழ்ச்சி கொண்டாடும் செய்திகளும் வெளிவந்துகொண்டிருக்கின்றன.

ஒப்பந்தத்திற்கு எதிராக அச்சுறுத்தப்பட்ட 'சத்தியாக்கிரகம்' நடைபெறாது என்றும் கூறப்படுகிறது.

உச்சமான சிங்கள இன மொழி வெறிகொண்டது எனக் கருதப்படும் 'ஸ்ரீலங்கா மகாசங்க சபா' என்ற சிங்கள இயக்கத்தின் தலைவர், தமது சபாவின் கோரிக்கைகளுக்கு பண்டா முற்றிலும் இணங்கிவிட்டார் என்று அறிக்கை ஒன்றில் கருத்தறிவித்திருக்கிறார். சில சிங்களப் பத்திரிகைகளும் மகிழ்ச்சி தெரிவித்து எழுதியுள்ளனவாம்!

## அடக்குமுறையின் உச்சவேகம்

### தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகம்

லோட்ஸ், ஆக. 14—

தங்களுடைய நல்வாழ்வுக்கு அரசாங்கம் வழிகாட்டும் என்று போலந்து போக்கு-வரத்துத் தொழிலாளர்கள் நம்பி ஏமாற்றமடைந்த பின்னர், வேறு வழியில்லாமல் நேற்றுமுதல் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர் என்பது தெரிந்ததே!

அவர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்க மறுத்து பயங்கர அடக்குமுறைகளை அரசாங்கம் இப்போது கையாண்டுள்ளது.

ஒரு தொழிலாளிக்கு இப்போது தரப்படும் ஊதியம் 20 சிகரெட்டு அடங்கிய ஒரு பெட்டியின் விலைக்குக் குறைவானதாம்.

'இதைக்கொண்டு எப்படி வாழ முடியும்?' என்று குரலெழுப்பி, 10,000 பேர் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர்.

'மூன்று மணி நேரத்திற்குள் போக்கு-வரத்துத் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பிவிட வேண்டும்' என்று அரசாங்கம் கட்டளை பிறப்பித்ததாம். அதற்கு தொழிலாளர்கள் செவி சாய்க்கவில்லையாம்.

உடனே அரசாங்கம் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டதாம்; போலீஸ் படை அனுப்பப்பட்டதாம். இராணுவத்தை ஏவிவிட்டதாம்!

போக்கு-வரத்து சாதனங்கள் இருக்குமிடத்தில் தொழிலாளர்களை வளைத்துக்கொண்டு, அவர்கள் கட்டாயப்படுத்தினாராம்; தொழிலாளர்களிடமிருந்து 'டிப்போ'க்களை ஏவல் படைகள் கைப்பற்றினவாம்; துப்பாக்கிக் குண்டுகளை வெடித்துப் பயமுறுத்தினராம்.

இப்போது இராணுவத்தினர் போக்கு-வரத்து சாதனங்களை ஓட்டிவருகின்றனர் என்று கூறப்படுகிறது.

இதுவரை அரசாங்கத்திற்கும்—தொழிலாளர்களுக்கும் எந்தவித உடன்பாடும் ஏற்படவில்லை.

போலந்தில் போக்கு-வரத்து சாதனங்களை இயக்கிவரும் 10,000 தொழிலாளர்களின் குடும்பங்கள் வேலைநிறுத்தத்தின் காரணமாக தொல்லைகளையும் வேதனையையும் தாங்கிவருகின்றனவாம்—போலந்து ஒரு கம்யூனிஸ்டு நாடு!

நம் நாடு
தி.மு.க.தின் இதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 15—8—57 வியாழன்

# 'டெல்லிப் பெரியவர்'கள் சிந்திக்கட்டும்!

உயர்தரப் பள்ளிக்கூடங்களில் இந்தியைக் கட்டாய பாடமாக்க வேண்டும்.

பல்கலைக் கழகங்களில் கல்வி இந்தி மூலமே போதிக்கப்படவேண்டும்.

டெல்லி சர்க்கார் உத்தியோகங்களுக்கான பரிட்சைகள் இந்தி மொழியிலேயே நடைபெற வேண்டும்.

இரயில்வே, தபால்-தந்தி, வருமான வரி முதலிய டெல்லி சர்க்காரின் நிர்வாகத் துறைகளின் அலுவல்கள் அனைத்தும் இந்தி மொழியிலேயே, பிரதேச மொழிகளின் துணையுடன் நடைபெற வேண்டும்.

மக்கள்சபை, மாநிலங்கள்சபை, மாநில சட்டசபைகள் இங்கெல்லாம், அலுவல்கள் இந்தி மொழியிலேயே நடத்தப்பட வேண்டும்.

நீதிபரிபாலனம் இந்தியில்தான் நடைபெறவேண்டும்; தலைமை உயர் நீதிமன்றத் தீர்ப்புகள் இந்தி மொழியிலேயே தரப்படுதல் வேண்டும்; சட்டங்கள் அனைத்தும் இந்தி மொழியிலேயே வெளியிடப்படல் வேண்டும்; மாநில உயர் நீதிமன்றங்களின் தீர்ப்புகளும் இந்தியில் வெளியிடப்படவேண்டும்.

இவை எல்லாம், டெல்லி சர்க்கார் நியமித்த இந்தித் திணிப்புக் குழு, டெல்லி சர்க்காருக்கு நேற்று முன்தினம் வெளியிடப்பட்ட தனது அறிக்கையில் தந்துள்ள சிபாரிசுகளில் சிலவாகும்.

இந்தச் சிபாரிசுகள் ஒன்றும் நம்மை ஆச்சரியத்தில் மூழ்கடிக்கவில்லை; ஏனெனில், இவை நாம் எதிர்பாராதவை அல்ல! [illegible]வும் இவற்றில் பல, டெல்லி [illegible]காரால் ஏற்கனவே நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டு விட்டவைதான். 'அரசாங்க மொழிக் கமிஷன்' என்ற பெயரில், அரசியல் சட்ட விதிப்படி இந்தக் குழு 1955-ம் ஆண்டில் நிறுவப்படுவதற்கு முன்பேகூட இந்தச் சிபாரிசுகள் டெல்லிப் பெரியவர்களின் கட்டளைகளாக, தபால்—தந்தி, இரயில்வே, இராணுவம் முதலிய துறைகளில் நடைமுறைக்கு வந்துவிட்டன என்ற நிலையில், இந்தச் சிபாரிசுகளுக்கு ஆச்சரியமூட்டும் வீரியம் இல்லை.

இந்தச் சிபாரிசுகள், அமுல் செய்யப்பட்டால், விளையக் கூடிய கேடுகளை, நமது தமிழ் நாட்டின் அருமந்த ஏடுகள் விளக்கியிருக்கின்றன; குழுவின் சிபாரிசுகளைக் கண்டு ஆத்திரப்பட்டிருக்கின்றன, சில; சிபாரிசுகளில் சிலவற்றை ஏற்பதாகவும், சிலவற்றைக் கண்டிப்பதாகவும் எழுதியிருக்கின்றன, சில!

ஆனால், இதுபோன்ற ஒரு குழுவிடமிருந்து, இத்தகு சிபாரிசுகளைத் தவிர வேறெதனையும் நாம் எதிர்பார்ப்பதற்கில்லை; 'நல்லவேளை'யாக, வங்கத்தைச் சேர்ந்த டாக்டர் சுனிதி குமார் சட்டர்ஜியும் தமிழகத்தைச் சேர்ந்த டாக்டர் சுப்பராயனும் சிபாரிசுகளுக்குத் தமது சக்திக்கேற்ற எதிர்ப்பைத் தெரிவித்திருக்கின்றனர்.

டெல்லிப் பெரியவர்கள், அரசியல் சட்ட வரம்புகளையும்மீறி எதேச்சாதிகாரமாக ஈடுபட்டிருக்கும் இந்தித் திணிப்பு வேலைகளுக்கு, 'சிபாரிசுகள்' என்ற 'முத்திரை'யைப் பெறுவதற்காகத்தான் குழுவே நியமிக்கப்பட்டது என்ற கருத்தில் தவறு காண முடியாது. இந்தக் குழுவே 'இந்தியைத் திணிப்பது எப்படி' என்ற வழிவகைகளைக்கூறத்தானே நியமிக்கப்பட்டது? நாம் அன்றுமுதல் இந்தக் குழுவை, 'இந்தித் திணிப்புக் குழு' என்று பெயரிட்டு அழைத்து வந்திருப்பதும், இந்தக் குழுவைப் பொருட்படுத்தாமலிருந்திருப்பதும், அந்தக் காரணத்தினால்தான்!

இந்தி இன்னும் ஆட்சி மொழியாகும் தரம், தகுதி, வளம் பெறவில்லை என்ற கருத்தின் அடிப்படையில் சிபாரிசுகளை நோக்குவோர், அவற்றைக் கண்டு ஆத்திரப்படுவதும், அவற்றின் விளைவுகளை எண்ணி கொதிப்படைவதும் இயற்கைதான். ஆனால் நாம் இந்தியை எதிர்ப்பது, அந்த அடிப்படையில் இருந்து மட்டும் அல்ல.

நமது இந்தி எதிர்ப்பின் அடிப்படை இன்னும் விசாலமானது—ஆழமானது — இயற்கையான தேசிய அபிலாஷைகளை உள்ளடக்கியது என்பதை நாடு நன்கறியும்; நம்மை அறிந்துகொள்ள முயற்சித்தவர்கள் அறிவர்.

இந்தி, 'ஏக இந்தியா' என்ற ஏகாதிபத்திய அரசியல் அமைப்பை நிலைநாட்டும் ஒரு கருவி என்பதை நாம் இனிமேல்தான் விளக்கவேண்டும் என்பது அல்ல.

தென்னாடு—தமிழகம், இன்றைய, 'ஏக இந்திய' ஏகாதிபத்திய அரசியல் அமைப்பிலிருந்து—வட நாட்டவரின் ஆதிக்கப் பிடிப்பிலிருந்து விடுதலைபெற்று இன்று இழந்து நிற்கும் சுதந்திர நாடு என்ற அந்தஸ்தை மீண்டும் பெற்றாக வேண்டும் எனும் இலட்சியத்தைக் கொண்ட நாம், இந்தித் திணிப்பை எதிர்ப்பது, அது தரமோ தகுதியோ, வளமோ இல்லாத ஒரு மொழி, என்பதினால் மட்டுமல்ல; அந்தமொழி ஏற்கனவே நமது தாயகத்தின் கரங்களில் பூட்டப் பட்டிருக்கும் அடிமை விலங்கினை உறுதி செய்யும் கருவி என்பதினாலும்தான் எதிர்க்கிறோம்.

இந்த நமது தெளிவான நிலையைப் புரிந்து கொண்டிருப்பவர்கள், இந்தித் திணிப்புக் குழுவின் சிபாரிசுகள் குறித்த நமது கருத்தைப் புரிந்துகொள்வதில் சிரமம் காணமாட்டார்கள்.

நேற்று முன்தினம் நாம் இங்கு எழுதியிருந்தபடி, தமிழ் நாட்டில் நீறுபூத்த நெருப்பாயிருக்கும் இந்தி எதிர்ப்பைக் கொழுந்துவிட்டெரியச் செய்யும் இந்தச் சிபாரிசுகளைச் செய்யத் துணிந்த இந்தித் திணிப்புக் குழுவினர், தமிழ் மக்களின் உள்ளத்தைப் புரிந்துகொள்ள முயற்சிக்கவில்லை; பரிதாபத்திற்குரியவர்கள்!

ஏற்கனவே வெறியாட்டம் போட்டுக்கொண்டிருக்கும் வட நாட்டுப் பெரியவர்களுக்கு, சாம்பிராணிப் புகை போடுவதாக அமைந்துள்ள இந்தச் சிபாரிசுகளை, அமுல் செய்யச் சிந்திப்பதற்கு முன்னால் டெல்லிப் பெரியவர்கள், இன்றைய தமிழகத்தையும், அதன் விடுதலைக்காக வீறுகொண்டு எழுந்து நிற்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆற்றலையும் கணக்கில் எடுத்துக்கொள்ளத் தவறிவிடுவார்களேயானால், கசப்பான விளைவுகளை மலிவான விலைக்கு நிர்ப்பந்தமாக அவர்கள் வாங்க நேரிடும் என்றுமட்டும் எச்சரிக்கிறோம்.

இந்தித் திணிப்புக் குழுவின் சிபாரிசுகளை பிறிதோர் நாள் இங்கு விமர்சிப்போம்.

## சிக்கனத்தின் இலட்சணம்!

புதுடில்லி, ஆக. 13—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி பெருமையாக மக்களிடம் பிரச்சாரம் செய்து அந்தத் திட்டம் நிறைவேற நாட்டு மக்கள் ஒத்துழைப்பு தரவேண்டும் என்றும், செல்வத்தை சீரழிக்காமல் எல்லாத் துறைகளிலும் சிக்கனத்தைக் கையாளவேண்டுமென்றும் வற்புறுத்திவருவதும், பலர் பலவித கோணங்களில் சிக்கன முறைகளைக் கூறிவருவதும் இந்தியப் பேரரசைப் பொறுத்தமட்டில் வெறும் வெளிவேஷம் என்றே கருதவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது!

இந்தியப் பேரரசு வடநாட்டில் துவக்கியுள்ள மூன்று உருக்குத் தொழிற்சாலைகளில் ஒன்றான துர்காபூரில் ஒரு பெரிய விடுதியைக் கட்டத் திட்டமிடப்பட்டுள்ளதாம்!

இந்தக் கட்டிடம் அழகிலும், வனப்பிலும், ஆடம்பரத்திலும், நவீனத்திலும், டில்லியில் உள்ள அசோகா விடுதியைப் போன்றதாக இருக்கவேண்டும் என்று டில்லிப் பேரரசு கருதியுள்ளதாம்!

இதற்கு இலட்சக்கணக்கில் செலவிடவும் தயாராகிவருகிறதாம், திட்டம்!

வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வருபவர்கள் இதைக் கண்டே இந்தியாவின் மதிப்பை அளவிட வேண்டுமென்றும் டில்லி எதிர்பார்க்கிறதாம்!

சிக்கனம், சிக்கனம் என்று பள்ளுபாடியவர்களின் செயல் இவ்வாறு அமைந்துள்ளது!

## குறைந்தபட்ச ஊதியம்

### விவசாயிகளுக்குப் பயன்படும் வகையில் திருத்துமாறு உறுப்பினர்கள் வற்புறுத்தல்

இன்று மக்கள் சபையில் குறைந்தபட்ச ஊதிய சட்டத்தைப்பற்றி விவாதம் நடைபெற்றபோது, அந்தச் சட்டத்தின்கீழ் விவசாயத் தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படவேண்டும் என்று உறுப்பினர்கள் வலியுறுத்தினர்.

நீண்ட காலமாக இந்தச் சட்டம் விவசாயிகளுக்குப் பயன்படும் வகையில் திருத்தப்படவேண்டும் என்று கோரப்பட்டு வந்திருந்தும்கூட, இந்தியப் பேரரசு தயக்கம் கொண்டு காலதாமதம் செய்து வந்துள்ளது.

இறுதியில் குறைந்தபட்ச ஊதியச் சட்டம் 1959 வரை நீடிக்கப்பட்டது.

## சோஷலிஸ்டு போராட்டம்

சேலம், ஆ. 12—

சோசலிஸ்டுக் கட்சியினர் போராட்டம் ஆரம்பித்த தேதியிலிருந்து இதுவரை 53 பேர் சேலம் நகரில் மட்டும் கைதாகி இருக்கின்றனர்.

## சென்னை நகரில் சேரி ஒழிப்பு

### டில்லி நிதி உதவும் விவரம்

சென்னை நகரில் 9 சேரிகளைச் சீர்திருத்தியமைப்பதற்காக சென்னை அரசாங்கம் வகுத்த அபிவிருத்தித் திட்டங்களை இந்தியப் பேரரசு அனுமதித்து, செலவினங்களை அனுமதித்த செய்தி முன்னரே நம் இதழில் தரப்பட்டிருக்கிறது; அதன் விவரங்கள் இப்போது தரப்படுகின்றன:—

மொத்தம் 1,001 குடும்பங்களுக்கு சுகாதாரமான குடியிருப்புகள் கிடைக்கும். ரூ. 175 மாதச் சம்பளத்துக்குக் குறைந்த வருமானமுள்ளவர்களுக்கு இவ்வசதிகள் தரப்படும். இத்திட்டங்கள் 1958 மார்ச் 31-ந்தேதிக்குள் முடிக்கப்பட வேண்டும்.

### லாக் நகர்:

லாக் நகர் பகுதி அபிவிருத்திக்கு ரூ. 86,260; இத்திட்டத்துக்கு ரூ. 1,15,000 செலவாகும்; அதில் கால் பங்கு செலவை இந்திய சர்க்கார் ஏற்கும்—மானியமாக ரூ. 28,750 தரும்—ரூ. 57,500 கடனாகத்தரும். அதற்குச் சமமான தொகையைப் போட்டு சென்னை சர்க்கார் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும்.

இப்போது 78 குடிசைகளில் குடியிருக்கும் 115 குடும்பங்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பது இதன் நோக்கம். இக்குடும்பங்களில் மொத்தம் 460 பேர் இருக்கிறார்கள். இதில் 44 குடும்பங்கள் இப்போதுள்ள பகுதியிலே குடிவைக்கப்படுவர்.

### வாழைப்பூச்சேரி:

வாழைப்பூச்சேரி அபிவிருத்திக்கு ரூ. 1,17,000 ஒதுக்கப்படுகிறது; இங்கு 228 குடும்பங்கள் உள்ளன; ஒவ்வொரு குடும்பத்துக்கும் தலா 875 சதுர அடி வீடும் மனைக்கட்டும் தரப்படும்.

இத்திட்டத்திற்கான செலவில் ரூ. 57,000 இந்திய சர்க்கார் மானியமாகவும்; ரூ. 1,14,000 கடனாகவும் தரும். சென்னை சர்க்கார் ரூ.57,000 போடவேண்டும்; மொத்தம் ரூ. 2,28,000 செலவாகும்.

### கரிமேடுச்சேரி:

கரிமேடுச்சேரி அபிவிருத்தித் திட்டத்துக்கு மொத்தம் ரூ 2,90 000 செலவாகும். 31—3—58-க்குள் முடிக்கவேண்டும். இந்திய அரசாங்கம் ரூ 2,17,500 அனுமதித்துள்ளனர்; அதில் ரூ. 72,500 மானியமாகவும், ரூ. 1,45,000 கடனாகவும் தரப்படும். மீதி ரூ. 72,500 செலவை சென்னை அரசாங்கமே போட்டுக் கொள்ளவேண்டும். 290 குடும்பங்களுக்கு தலா 800 அல்லது 875 சதுர அடி மனை வழங்கப்படும்.

### நொச்சிக்குப்பம்:

நொச்சிக்குப்பம் பிரதேசப் பொது அபிவிருத்தித் திட்டத்துக்கு ரூ. 2,00,250 அனுமதிக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்துக்கு மொத்தம் ரூ. 2,67,000 செலவாகும். இந்திய சர்க்கார் ரூ. 66,750 மானியமாகவும், ரூ. 1,33,500 கடனாகவும் வழங்கும். சென்னை அரசாங்கம் ரூ. 66,750 போட்டுக் கொள்ளவேண்டும். இந்தப் பகுதியில் 362 குடும்பங்கள் வசிக்கின்றன. அவர்களில் 267 குடும்பங்களுக்கு நன்கு அபிவிருத்தி செய்யப்பட்ட மனைகள் தரப்படும். தலா ரூ. 125 கட்டிடச் சாமான்களும், ரூ. 25 ரொக்கமும், 875 சதுர அடி மனையும் வழங்கப்படும்.

### நடைபாதையில் வாழ்வோர்:

சென்னைத் துறைமுகப் பகுதியில் 101 நடைபாதையில் வாழும் குடும்பங்களுக்கான இத்திட்டத்துக்கு ரூ. 75,750 தரப்படும். மொத்தச் செலவு மதிப்பு ரூ. 1,01,000; அதில் ரூ. 25,250 மானியமாகவும் ரூ. 50,500 கடனாகவும் இந்திய சர்க்கார் தரும்; மீதி ரூ. 25,250 சென்னை சர்க்கார் போடும்.

## சென்னைக்கு ரூ. 15 இலட்சம்தான்!

புதுடில்லி, ஆக. 13—

1957—58-ல், சேரி சீர்திருத்தத்திற்காக மத்திய அரசாங்கம் மொத்தம் ரூ. 1-கோடி ஒதுக்கியுள்ளதாம்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், சேரிகள் சீர்திருத்தத்திற்கு திட்டக் குழு ரூ. 15-கோடி ஒதுக்கியுள்ளதாம்.

1957-58-ம் ஆண்டிற்கு ரூ. 15 இலட்சம் மட்டுமே சென்னை மாநிலத்திற்கு இத்திட்டத்தின்கீழ் ஒதுக்கப்பட்டுள்ளதாம்.

இரண்டாவது திட்டக் கால முழுவதற்கும் சென்னை மாநிலம் ரூ. 126 இலட்சம் மட்டுமே பெறுமாம்!

## இலட்சிய அளவைவிட அதிகரித்துவிட்டதாம்!

1956—57-ம் ஆண்டு உணவு உற்பத்தியானது நிர்ணயிக்கப்பட்ட இலட்சிய அளவைவிட 21·7 இலட்சம் டன் அதிகரித்துள்ளதாக மத்திய அமைச்சர் கிருட்டிணப்பா மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

## 'ஒருமுனை விற்பனை வரியே வேண்டும்'

### டாக்டர் லோகநாதனுடன் தமிழ்நாடு வர்த்தகக் கழகக் குழு பேட்டி

குற்றாலம், ஆக. 10—

நேற்று காலை 11 மணிக்கு, திருச்சியில், அரசாங்கம் நியமித்துள்ள டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்களை தமிழ்நாடு வர்த்தகக் குழு, திரு. வி. வி. இராமசாமி எம்.எஸ்.சி. தலைமையில் பேட்டிக் கண்டது.

சுமார் 2 மணி நேரத்திற்கு மேல் பல சிக்கலான விஷயங்கள் மீது விவாதம் நடைபெற்றது.

ஒருமுனை வரி விதிப்பே தேவை என்றும், எந்தெந்தப் பொருளுக்கு எவ்வளவு வரி விதிக்கலாமென்பதை வர்த்தகப் பிரமுகர்களையும், மாவட்ட விற்பனை வரி ஆலோசனை குழுக்களையும் கலந்து நிர்ணயிக்க வேண்டுமென்றும், உணவுத் தானியங்கட்கு வரியிலிருந்து முழு விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்றும், இது சாத்தியமில்லையானால் வெளியிலிருந்து இறக்குமதியாகும் தானியங்களுக்கு மட்டுமாகிலும் வரி விதிக்கலாமென்றும் மாநிலத்துக்கு மாநிலம் வரி விதிப்பில் வித்தியாசம் இருக்கக்கூடாதென்றும், சென்னைமாநிலத்தில் மட்டும் துணிகள் மீது ரூபாய்க்கு 1½ அணா வீதம் விதிக்கப்பட்டுள்ள கூடுதலான வரியை உடனடியாக விலக்கிவிட வேண்டுமென்றும், ஒரே பொருளுக்கு இருமுறை வரி விதிக்கக்கூடாதென்றும், வர்த்தகம் செய்வதை அனுசரித்து—அதாவது கொள்முதல் கணக்கைப் பார்த்து, 'லைசென்சு பீஸ்' ஆக மாதம் பிரதி செலுத்தும் முறையில் வசூலிக்கலாமென்றும், சட்ட திருத்தங்கள் செய்வதாயின் 'கெசட்'டிலும், பத்திரிகைகளிலும் முன்னதாக விளம்பரம் செய்து வர்த்தகப் பிரமுகர்களையும் கலந்துகொள்ள வேண்டும் என்றும், ஆண்டின் மத்தியில் எந்தவிதமான வரி விதிப்போ உயர்வோ கூடாதென்றும், ரூ. 30,000-த்திற்கு மேல் வர்த்தகம் செய்பவர்கட்கே வரி விதிக்க வேண்டுமென்றும், அதற்குள் வர்த்தகம் செய்பவர்களை கணக்கு வைக்கவேண்டுமென்று கேட்கக்கூடாது என்றும், வியாபாரியின் வீட்டை சோதனை செய்வதாயின், மாவட்ட விற்பனை வரி அதிகாரி தகுதிக்குக் குறையாத அதிகாரி ஒருவர் உள்ளூர் வர்த்தக சங்கமாவாகி ஒருவர் முன்னிலையில் சோதனை செய்யலாமென்றும் தங்களின் முடிவான கருத்துக்களை தூதுக் குழுவினர் தெரிவித்தனர்.





# தாளமுத்து கொலை வழக்கு

## மேலும் சாட்சிகள் விசாரணை விவரம்

### எதிரிகள் தந்த வாக்குமூலம்

திருவைகுண்டம், ஆக. 12—

தூத்துக்குடி தி. மு. கழகத் தோழர் தாளமுத்துவை சென்ற மே மாதம் 22-ம் தேதி, ஆயுதங்களால் தாக்கிக் கொலை செய்ததாகவும், மற்றும் ராஜா என்பவரைக் கொலை செய்ய முயன்றதாகவும், நீதிராசன் மற்றும் 9 பேர்மீது தொடரப்பட்டுள்ள வழக்கில் பூர்வாங்க விசாரணை திருவைகுண்டம் சப்-மாஜிஸ்திரேட் முன்னிலையில் தொடர்ந்து ஆரம்பமாயிற்று.

போலீஸ் தரப்பில் மொத்தம் 8 சாட்சிகள் விசாரிக்கப்பட்டு, சாட்சியம் பதிவு செய்யும் வேலை முடிவடைந்தது.

விசாரணை ஆரம்பமானவுடன், முன்தினம் குறையாக விசாரிக்கப்பட்ட 3-வது சாட்சி மாடசாமி குறுக்கு விசாரணையின்போது பதிலளிக்கையில், தாம் சம்பவதினத்தன்று மார்க்கெட்டுக்கு டவுன் பஸ்ஸில் செல்லுகையில் தாளமுத்து நடந்து செல்வதைக் கண்டு, பஸ்ஸைவிட்டு இறங்கி தாளமுத்துவிடம், தனது மகன் காற்றுடி-சுப்பிரமணியன் விஷயமாகச் சில வார்த்தைகள் பேசியதாகவும், பிறகு தாளமுத்து, ராஜா மற்றுமொருவர் ஆகியோர் செல்லத் தாமும் பின்னாலேயே சிறிது தூரம் சென்றதாயும், எதிரிகள் தாளமுத்துவையும், ராஜாவையும் தாக்குவதை நன்றாகப் பார்த்ததாயும், எதிரிகள் சென்றபின் தாம் தாளமுத்து, ராஜா இருந்த இடத்தைத் தாண்டிச் செல்லுகையில் அவர்களைப் பார்த்துச் சென்றதாயும், ஆனால் அவர்களுடன் பேசவில்லையென்றும், மார்க்கெட்டுக்குப் போய் சாமான்கள் வாங்கியபின் வீட்டிற்குச் சென்றுவிட்டதாகவும், இரவில் போலீசார் கூப்பிட்டு சம்பவம் நடைபெற்ற இடத்தில் தன்னை விசாரிக்கும்வரை ஒருவரிடமும் இதைப் பற்றிச் சொல்லவில்லையென்றும் கூறினர்.

### நான்காவது சாட்சி

நான்காவது சாட்சியாக டாக்டர் டி. ஜி. சுப்பிரமணியம் சாட்சியமளிக்கையில் தூத்துக்குடி சர்க்கார் மருத்துவமனையில் தாம் உதவி—சர்ஜனென்றும், 22-ம் தேதி சுமார் 11 மணிக்கு படுகாயங்களுடன் தாளமுத்து மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டதாகவும், நிலைமை மோசமாக இருந்ததால் சப்-மாஜிஸ்திரேட்டுக்குத் தகவல் கொடுத்து, மரண வாக்குமூலம் பதிவு செய்ய ஏற்பாடு செய்ததாகவும், ராஜா என்ற மற்றொருவருக்கும் கையிலும் விலாவிலும் படுகாயங்களேற்பட்டு மருத்துவமனைக்கு வந்ததால் அவரையும் பரிசோதித்து சிகிச்சைக்கு ஏற்பாடுகள் செய்ததாகவும், மாலை சுமார் 5 மணிக்கு தாளமுத்து இறந்துவிட்டதாகவும், மறுதினம் தாம் பிரேத பரிசோதனை செய்ததாகவும், அவர் உடம்பில் 7 காயங்கள் இருந்தனவென்றும், அவற்றில் சிலவற்றின் காரணமாகவே அவர் இறந்திருக்கலாமென்றும் கூறினர்.

### சப்-மாஜிஸ்திரேட் சாட்சியம்

அடுத்த சாட்சியாக தூத்துக்குடி சப்-மாஜிஸ்திரேட் திரு. பட்டாபிராமன் சாட்சியமளிக்கையில், 4-வது சாட்சியின் விருப்பப்படி, தாம் மே மாதம் 22-ம் தேதி மருத்துவமனைக்குச் சென்று தாளமுத்துவிடம் மரணவாக்குமூலம் வாங்கியதாகக் கூறினர்.

### ஆறாவது சாட்சி

ஆறாவது சாட்சியாக செல்லப் பிள்ளை என்ற செல்லய்யா பிள்ளை சாட்சியமளிக்கையில், தாம் கிரேட் காட்டன் சாலையில் சம்பவம் நடைபெற்ற இடத்தின் சமீபம் பலசரக்குக் கடை நடத்திவருவதாகவும், மேற்படி சம்பவதினத்தன்று காலையில் வடிவேல் என்பவரிடம் சீயக்காய்ப்பொடி வாங்கிக்கொண்டிருக்கையில் சம்பவம் நடைபெற்றதென்றும், தாளமுத்துவை சுமார் 10 பேர்கள் சூழ்ந்துகொண்டு அரிவாள், கத்தி முதலிய ஆயுதங்களுடன் தாக்கிப் படுகாயமேற்படுத்தினரென்றும், அவர்களில் 6-வது எதிரி அருணாசலப் பணிக்கரும் இருந்தாரென்றும், அவர் கையில் அரிவாள் இருந்ததென்றும், தாளமுத்துவுக்குப் பிறகு எதிரிகள் ராஜாவையும் தாக்கிக் காயமேற்படுத்தினரென்றும் சம்பவம் நடந்தவுடன் தான் கடையைப் பூட்டிவிட்டதாகவும் எதிரிகளும் மேற்கே ஓடிவிட்டனரென்றும் கூறினர்.

சாட்சியைக்குறுக்கு விசாரணை செய்கையில் சாட்சி தமது கடைக்கு எதிர்புறத்திலுள்ள மேடையில் புதுமை இலக்கிய மன்றம் இருக்கிறதென்றும் 6வது எதிரி அதற்குச் செயலாளரென்றும், அவர் அடிக்கடி அங்கு செல்வாரென்றும், அந்த ரோடு பொதுவாக மக்கள் நடமாட்டம் உள்ளதென்றும், தமது கடையின் வாயிலில் பாதை ஓரத்தில் சம்பவம் நடைபெற்றதென்றும் 6-வது எதிரியைத் தவிர எதிரிகளில் யாரையும் தெரியாதென்றும், சம்பவத்தைப் பற்றி அன்றிரவு வரை யாரிடமும் கூறவேயில்லையென்றும், மாலையில் மறுபடியும் தாம் கடையைத் திறந்ததாகவும், போலீஸ் அதிகாரிகள் தம்மையும் மாலையில் விசாரித்ததாகவும், புதுமை இலக்கிய மன்றத்தை போலீசார் சோதனையிட்டனரென்றும் சம்பவம் நடைபெற்ற இடத்தையும் பார்த்தனரென்றும் கூறினர்.

### ஏழாவது சாட்சி

வடிவேல் என்பவர் சாட்சியமளிக்கையில் சம்பவம் நடைபெற்றபோது 6-வது சாட்சியின் கடைக்கு சீயக்காய்த்தூள் பொட்டணங்களைத் தாம் கொடுத்துக்கொண்டிருந்ததாகவும், 6-வது சாட்சியின் கடைவாசல் முன் சாலையில் குத்து, வெட்டு என்ற சத்தம் கேட்டுப் பார்க்கையில் தாளமுத்துவை 10 பேர்கள் வளைத்துக்கொண்டு அரிவாள், கத்திகளால் தாக்கிக்கொண்டிருந்தனரென்றும், தாளமுத்து கீழே விழுந்தவுடன், அவர்களில் சிலர் ராஜாவையும் தாக்கிக் காயப்படுத்தி எல்லோரும் ஓடிவிட்டனரென்றும் உடனே தான் பயந்துபோய் அங்கிருந்து சென்றுவிட்டதாகவும், தாளமுத்துவைத் தாக்கியவர்களில் முதல் 5 எதிரிகளையும், 8, 9-வது எதிரிகளையும், ராஜாவை 7-வது எதிரி தாக்குவதையும் பார்த்ததாகவும் கூறினர்.

சாட்சியைக் குறுக்கு விசாரணை செய்கையில் தமக்கு 6, 10-வது எதிரிகளைத் தெரியாதென்றும், தம்மைப் போலீசார் விசாரிக்கும்வரையில் யாரிடமும் சம்பவத்தைப்பற்றிச் சொல்லவில்லையென்றும் கூறினர்.

### எட்டாவது சாட்சி

கடைசியில் 8-வது சாட்சியாக சிதம்பரம் பிள்ளையென்ற கடைக்காரர் விசாரிக்கப்பட்டார். அவர் தமது சாட்சியத்தில் தமது கடை, சம்பவம் நடைபெற்ற இடத்திற்கு எதிர்ப்புறம் உள்ளதென்றும், மாடியில் புதுமை இலக்கிய மன்றம் உள்ளதென்றும், அதில் காலை நேரத்தில் இந்தி கற்றுக் கொடுக்கப்படுமென்றும், 6-வது எதிரி அருணாசலம் அதற்கு செயலாளர் என்றும், சில சமயங்களில் மன்றத்தின் சாவியை இந்தி மாணவர்கள் தன் கடையில் கொடுத்துவிட்டுச் செல்வார்களென்றும், சம்பவம் நடைபெற்ற சமயம் தமது கடையில் வியாபாரம் செய்து கொண்டிருந்ததாகவும், 'குத்து வெட்டு' என்ற சத்தம் கேட்டுப் பார்க்கையில் எதிர்சாரியில் பிளாட்பாரம் ஓரத்தில் பலர் சேர்ந்து ஒருவரைத் தாக்குவதைக் கண்டதாகவும், தாக்கப்பட்டவர் தாளமுத்து என்று தெரிந்துகொண்டதாகவும், அடுத்து அவருடன்கூட வழக்கமாகச் செல்லும் ராஜா'வும் தாக்கப்பட்டாரென்றும், தம்முடைய கடையிலிருந்து பார்த்தால் சம்பவம் நடந்ததை மட்டுமே பார்க்க முடியுமே தவிர, குறிப்பாக யார் யார் வெட்டினர், குத்தினர் என்பது விளக்கமாகத் தெரியாதென்றும் கூறினர். ஆனால் கூட்டத்தில் தமக்கு ஏற்கனவே தெரிந்த 6, 9-வது எதிரிகளைப் பார்த்ததாயும், சம்பவம் நடந்தவுடன் பயத்தால் கடையை மூடிவிட்டுச் சென்றதாகவும், மாலையில் மறுபடி திறந்ததாயும், இரவில் போலீசார் விசாரித்ததாகவும் கூறினர்.

சாட்சியைக் குறுக்கு விசாரணை செய்கையில், மறுநாள் காலையில் போலீசார் முன்பே சொன்னபடி புதுக் கிராமம் போலீஸ் நிலயத்திற்குச் சென்று மாலையில் திரும்பி வந்ததாகவும், தம்மைப் போலீசார் அடிக்கவில்லையென்றும் தம்மை (சாட்சியை) போலீசார் நிலயத்திற்கு அழைத்துச் சென்று இம்சை செய்ததாக தமது சகோதரர் அதிகாரிகளுக்குப் புகார் செய்ததாக சகோதரர் தம்மிடம் கூறியதாகவும் கூறினர்.

### எதிரிகள் வாக்குமூலம்

நீதிராசன் மற்றும் 9 எதிரிகளும் 9—8—57-ல் தங்கள் வாக்குமூலங்களைப் பதிவு செய்து கொண்டனர்.

6-வது எதிரி அருணாசல பணிக்கரைத் தவிர,மற்ற எதிரிகள் தாங்கள் கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினர்கள் அல்லவென்று கூறினர்.

போலீஸ் தரப்பு முதலாவது சாட்சியின் சாட்சியத்தில் சென்ற சனவரி மாதம் 15-ந் தேதியன்று சாட்சியின் கூட்டாளிகள் நீதிராசனை வெட்டியதாகவும், அதற்கான வழக்கில் சாட்சி சிறைத் தண்டனை அனுபவித்தது உண்மையென்றும் கூறியுள்ளதை நீதிராசன் (முதல்எதிரி) உண்மைதானென்று கூறினர். ஆனால் தூத்துக்குடி தி. மு. கழகத்தில் பிளவேற்பட்டது பற்றியோ, அதன் காரணமாக கே. வி. கே. சாமி கொலை செய்யப்பட்டார் என்று கூறுவதைப் பற்றியோ, தாளமுத்து, கே. வி. கே. சாமி கொலை வழக்கிலும், முனிசிப் கொலை வழக்கிலும் முறையே போலீஸ் தரப்பாருக்கும், எதிரிகளுக்குச் சாதகமாகவும் வேலை செய்தாரென்பதோ தமக்குத் தெரியாதென்று கூறினர்.

மேலும் அவர், முதல் சாட்சி ராஜா, 2-வது சாட்சி துரைசாமி, 3-வது சாட்சி மாடசாமி நாடார் ஆகியோர் தாளமுத்துவுக்கு மிகவும் வேண்டியவர்களாதலால் போலீசாருடன் சேர்ந்து தமக்கு எதிராகப் பொய் சாட்சியம் கூறுகிறார்களென்றும் கூறினர். போலீஸ் தரப்பு வழக்கில் கூறப்பட்ட சம்பவங்களைப் பற்றி தனக்கொன்றும் தெரியாதென்று கூறி மறுத்தார்.

6-வது எதிரி தனது வாக்குமூலத்தில் தாம் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவரென்பது உண்மையென்றும், முதல் சாட்சி ராஜா தமது தையல் கடையில் பணியாற்றுகையில் துணிகளைத் திருடியதால் இரண்டு தடவைகள் எச்சரிக்கை செய்து பின்னர் நீக்கிவிட்டதாகவும், தவிர, கம்யூனிஸ்டுக்கட்சியினருக்கும் தி.மு. கழகத்தினருக்கும் விரோதமேற்பட்டிருந்ததன் காரணமாக, சாட்சிகள் போலீசாரின் சொல்படி பொய்ச் சாட்சியம் கூறுவதாகவும், குறிப்பிடப்பட்ட சம்பவங்கள் பற்றி தமக்கொன்றும் தெரியாதென்றும் கூறினர்.

7-வது எதிரி நடராஜன், சாட்சிகள் விரோதத்தின் காரணமாக போலீசாரின் விருப்பப்படி சாட்சியம் சொல்வதாகவும், தவிர, போலீசார் அடையாளம் காட்டி சாட்சிகளைக்கொண்டு கண்டுபிடிக்கச் சொன்னதாகவும், போலீஸ் தரப்பில் கூறியபடி தமக்கொன்றும் தெரியாதென்றும் கூறினர்.

மேலும் தாளமுத்துவிடம் தமக்கொன்றும் விரோதமில்லையென்றும் கூறினர்.

10-வது எதிரி ராஜபாண்டி, தாம் கே. வி. கே. சாமி கொலை வழக்கில் சர்க்கார் தரப்பு சாட்சியாகப் போடப்பட்டு, நீதிமன்றத்தில் போலீசார் சொல்லிக் கொடுத்ததுபோன்று சாட்சியம் சொல்லாமல் உண்மையைச் சொன்னதாகவும் போலீசாருக்கு உதவிசெய்த தாளமுத்துவுக்கு இதனால் தம்மீது மனவிரோதமென்றும், இதையொட்டி முதல் சாட்சி தமக்கு விரோதமாக சாட்சியம் கூறினரென்றும், தாம் முதல் சாட்சியை வெட்டியதாகக் கூறுவதும், தாளமுத்துவை வெட்டிய கூட்டத்தில் இருந்ததாகக் கூறுவதும் முழுப் பொய்யென்றும் கூறினர்.

மற்ற எல்லா எதிரிகளும் தாளமுத்து, ராஜா ஆகிய இருவரையும் தாக்கியதாகச் சொல்லப்படும் சம்பவத்தைப்பற்றி தங்களுக்கு ஒன்றும் தெரியாதென்றும், சம்பவத்தை நேரில் பார்த்ததாகக் கூறும் சாட்சிகள் சொல்வதெல்லாம் பொய்யென்றும் கூறினர்.

எல்லா எதிரிகளும் தங்கள் சார்பில் சாட்சிகளை மேல் கோர்ட்டில் விசாரிக்கப் போவதாகவும் கூறினர்.

இத்துடன் சாட்சிகளின் வாக்குமூலங்கள் பதிவு செய்து முடிவடைந்தன.

## சேலத்தில் எஸ். எஸ். இராசேந்திரன் நாடகங்கள்

### நகராண்மைக் கழகத்துக்கு அன்பளிப்பு

சேலம், ஆக. 13—

சேலம் நகராண்மை கழகத்தாரால் நடத்தப்படும் பொருட்காட்சி கலை அரங்கில் தோழர் எஸ். எஸ். இராசேந்திரன் நாடகக் குழுவினரின் 'மணி மகுடம்' 'புதுவெள்ளம்' ஆகிய இரு நாடகங்கள் 11, 12-ந் தேதிகளில் நடைபெற்றன. ஏராளமான மக்கள் இருநாட்களிலும் நாடகங்களைக் கண்டு மகிழ்ந்தனர்.

12-ந் தேதி இரவு இராசேந்திரனின் நடிப்புத் திறமையைப் பாராட்டி சேலம் நகராண்மைக் கழகத்தலைவர் பி.மதுரைப்பிள்ளை பேசினர்.

தன்னைப் பாராட்டியதற்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில், எஸ். எஸ். இராசேந்திரன் குறிப்பிட்டதாவது:—

"பகுத்தறிவுப் பிரசாரத்தை அடிப்படையாகக் கொண்டு நாடகங்களை நடத்தி வருகிறேன்; எவருடைய மனதையும் புண்படுத்துவதற்காக எந்த நாடகத்தையும் நான் நடத்துவதில்லை: இந்தப் பொருட்காட்சி மூலம் கிடைக்கும் நிகர லாபத்தைக் கொண்டு நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி நூற்றாண்டு விழா நினைவுக் கட்டிடம் கட்டப் போவதாகஅறிவிக்கப்பட்டதைக் கண்டு மகிழ்வடைகிறேன். இந்த நல்ல காரியத்திற்கு நானும் ரூ. 101 நன்கொடை அளிக்கிறேன்"

நன்கொடை அளிக்க முன்வந்ததற்கு நகராண்மை கழகத் தலைவர் நன்றி தெரிவித்தார்.

(ந—நி.)

## வந்தவாசி தி.மு.கழகச் செயலாளர் தங்கவேலர் மறைவு

### அனுதாபக் கூட்டத்தில் சி. பி. சிற்றரசு

வந்தவாசி, ஆக. 12—

வந்தவாசி வட்ட தி. மு. க. செயலாளரும், ஊராண்மைக் கழக உறுப்பினரும், சென்ற 25 ஆண்டுகளாக சுயமரியாதை இயக்கத்தில் பணிபுரிந்தவருமான ஈ. தங்கவேலர் அவர்கள் மறைவுக்கு நகர தி. மு. கழகச் சார்பில் ஓர் பொதுக்கூட்டம் வந்தவாசி பஞ்சாயத்து தலைவர் ஜனப் கே. எஸ். கே. அபுபக்கர் அவர்கள் தலைமையில் 11-8-57 மாலை 5 மணிக்கு நடைபெற்றது.

கூட்டம் ஆரம்பமாவதற்குமுன் தோழர் கே. எஸ். சையத் அவர்கள் தலைமையில் ஓர் மாபெரும் மௌன ஊர்வலம் நகரின் முக்கிய தெருக்கள் வழியாக வந்தது.

மறைந்த தங்கவேலர் அவர்களின் அரிய சேவை குறித்து தோழர்கள் வி. டி. அண்ணாமலை எஸ். கே. ரசாக், கே. வி. டி. சீனுவாசன், கே. ஏ. வஹாப் எஸ். எம். குத்தூஸ் ஆகியோர் பேசியபின் தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் வந்தவாசி நகரம் சிறந்த சுயமரியாதை இயக்கத் தொண்டரை இழந்துவிட்டதென்றும், தி. மு. கழகம் கடமை — கண்ணியம் — கட்டுப்பாடுள்ள நல்ல பண்பாளரை இழந்துவிட்டதென்றும், தங்கவேலரின் அரிய சேவையைப் பற்றியும் பேசினர்.

பொதுமக்கள் சார்பில் திரு கே. வி. டி. சீனுவாசன் அவர்களால், அனுதாபத் தீர்மானமும், தங்கவேலர் குடும்பப் பாதுகாப்பு நிதி திரட்டுவதுபற்றிய தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன.

(க. மி.)

## சேலம் மாவட்டத்தில் புதிய கல்லூரிகள்

### திருச்செங்கோடு, அரூரில் ஏற்படுத்த முயற்சி

சேலம், ஆக. 13—

சேலம் மாவட்ட ஆட்சி மன்றத்தாருக்கு இரயில்வே நிர்வாகத்தினர் கொடுக்க விருக்கும் ரூ. 14 இலட்சம் நஷ்டஈட்டைக் கொண்டு சேலம் மாவட்டத்தில் அரூர், திருச்செங்கோடு ஆகிய ஊர்களில் இரண்டு கல்லூரிகளைத் திறக்க ஏற்பாடு செய்யுமாறு மாவட்டத் ஆட்சி மன்றத் தலைவர் திரு. காளியண்ணன் எம்.எல்.ஏ.-க்கு டில்லியிலிருந்து இந்தியப் பாராளுமன்ற உறுப்பினர் ஏ. துரைசாமி(கவுண்டர்) ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

'அரூர், திருச்செங்கோடு ஆகிய தாலுகாக்கள் மிகவும் பிற்போக்காக இருப்பதால், அந்தத் தாலுகாக்களில் கல்லூரிகளை ஆரம்பிக்க வேண்டியது மிக அவசியம்' என ஏ. துரைசாமி (கவுண்டர்) அந்தக் கடிதத்தில்வலியுறுத்தியுள்ளார்.

(ந. கி.)

## அரியலூரில் தீ விபத்து

### இயக்கத் தோழர்களின் உதவி

அரியலூர், ஆக. 12—

11—8—57 மாலை கவுண்டத் தெருவிலுள்ள நான்கு வீடுகள் திடீரெனத் தீப்பிடித்துக்கொண்டன. அதே வீடுகள் சென்ற ஆண்டிலும் தீக்கிரையாகி மீண்டும் கட்டப்பட்டது. இத்தீ விபத்தால் சுமார் ரூ. 5,000 நஷ்டம் ஏற்பட்டன. தீப்பிடித்தவுடன் நமது இயக்கத் தோழர்களும், மாணவர்கள், பொதுமக்களும் தீ பரவாமல் தடுத்து மற்ற வீடுகளைப் பாதுகாத்தனர்.

### பஸ் கவிழ்ந்தது

அரியலூரிலிருந்து திருமானூர் சென்றுகொண்டிருந்த பஸ்ஒன்று இருப்புப்பாலம் என்ற இடத்தில் விபத்துக்குள்ளாகி கவிழ்ந்தது. அதில் பிரயாணம்செய்துகொண்டிருந்த பிரயாணிகளில் பலருக்குக் காயம் ஏற்பட்டு மருத்துமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

(ந-கி.)

## 156 இரயில் இயந்திரங்கள்

புதுடில்லி, ஆக. 14—

1956—57-ம் ஆண்டில், வடநாட்டில், சித்தரஞ்சன் இயந்திர உற்பத்திச்சாலையில் மொத்தம் 156 இரயில் இயந்திரங்கள் தயாரிக்கப்பட்டுள்ளனவாம்!

# கழக வீரர் கே. வி. கே. சாமி கொலை வழக்கு

## விடுதலை செய்யப்பட்ட தங்கப்பழம் மற்றும் இருவருக்கு ஆயுட்கால சிறைத் தண்டனை

*அப்பீலில் உயர் நீதிமன்றத் தீர்ப்பு*

சென்னை, ஆக. 14—

தூத்துக்குடி கழக வீரர் கே. வி. கே. சாமி கொலை வழக்கில் குற்றஞ்சாட்டப்பட்டிருந்த எட்டுப் பேர்களில் நான்கு பேருக்கு தூக்குத் தண்டனையும், நால்வருக்கு விடுதலையும் தந்து நெல்லை மாவட்ட நீதிபதி கூறிய தீர்ப்புக்கு எதிராக அரசாங்கம், உயர் நீதிமன்றத்தில் அப்பீல் செய்திருந்ததின் பேரில், உயர் நீதிமன்ற நீதிபதிகள், என். சோமசுந்தரம், பஷீர் அகமது சையத் ஆகியோர். விடுதலை செய்யப்பட்ட தங்கப்பழம், எஸ். பெருமாள், பாண்டி என்ற வீரபாண்டித் தேவர் ஆகியோருக்கு ஆயுள் தண்டனை தந்து தீர்ப்பு வழங்கியிருக்கின்றனர்.

சந்தியாகு, பொன்னுசாமித் தேவர், ஆதிநாடார், ஜெகன்னுதன் ஆகிய நால்வருக்கும் தரப்பட்டிருந்த தூக்குத் தண்டனை ஆயுள் தண்டனையாக மாற்றப்பட்டிருக்கிறது.

பெருமாள் என்ற மற்றொரு எதிரியின் விடுதலைக்கு எதிராக சர்க்கார் செய்திருந்த அப்பீலை, நீதிபதிகள் தள்ளுபடி செய்தனர்.

"தங்கப்பழமும், எஸ். பெருமாளும்தான் இந்தக் கோஷ்டிக்குத் தலைவர்களாயிருந்திருக்கின்றனர் என்பதில் சந்தேகமே இல்லை; இதரர்கள், இவர்களது ஏவலாட்கள்தான்"

என்று, கூறியுள்ள நீதிபதிகள் 'தங்கப்பழம், பெருமாள், பாண்டி என்ற வீரபாண்டியத்தேவர் ஆகிய மூவருக்கும் ஆயுள் தண்டனை தந்துள்ளனர்.

"கோஷ்டிக்குத் தலைவர்களான இவர்களுக்கே ஆயுட்கால சிறைத் தண்டனைதான் தரப்படுகிறது என்னும்போது, இவர்களின் ஏவலாட்களுக்குத் தூக்குத் தண்டனை தரவேண்டும் என்பதல்ல; எனவே, இதர நால்வரின் தூக்குத் தண்டனையை, ஆயுட்கால சிறைத் தண்டனையாகக் குறைக்கிறோம்"

என்றும் நீதிபதிகள் கூறியிருக்கின்றனர்.

'கே. பெருமாள், விடுதலை செய்யப்பட்டது சரியே' என்றும் தீர்ப்புக் கூறியிருக்கின்றனர்.

# தாளமுத்து கொலை வழக்கு

எதிரிகள் மேல் விசாரணைக்கு அனுப்பப்பட்டனர்

திருவைகுண்டம், ஆக. 15—

தூத்துக்குடி தி. மு. கழகத் தோழர் தாளமுத்து கொலை செய்யப்பட்டது சம்பந்தமான வழக்கில், நீதிராஜன், மற்றும் 9 எதிரிகளையும் திருநெல்வேலி செஷன்சுக்கு (மேல் விசாரணைக்கு) அனுப்புவதாக, திருவைகுண்டம் சப்-மாஜிஸ்திரேட் திரு. ஏ. விசுவநாதன் நேற்று தீர்ப்பளித்தார்.

[வழக்கு விசாரணையின் மேல் விவரங்கள் 3-ம் பக்கத்தில் வெளியாகியிருக்கின்றன.]

# நெய்வேலி திட்டம்

**மக்கள்சபையில் தகவல்**

புதுடில்லி, ஆக. 15—

நெய்வேலியில் இரண்டு மின்சார நிலயங்கள் ஏற்படுத்தப்படுமாம்!

ஒன்று சுமார் ரூ. 21.37 கோடி செலவிலும், மற்றொன்று ரூ. 16 கோடி செலவிலும் அமைக்கப்படுமாம்.

இதற்கு வெளிநாடுகளிலிருந்து ரூ. 16 கோடிக்கு அந்நிய செலாவணி மூலம் வேண்டிய கருவி வசதிகள் செய்யவேண்டுமாம்.

இந்தியாவுக்கு ரஷ்யா 50 கோடி ரூபிள் கடன் தர முன்வந்ததில் ஆறு திட்டங்கள் நிறைவேற்றப்படுவதில் இதுவும் சேர்க்கப்பட்டுள்ளதாம்.

இதற்குத் தேவையான இயந்திரங்கள் குறித்து ரஷ்யாவுடன் கலந்து பேசி முடிவு செய்யப்படுமாம்.

# மின்சார ஊழியர் வேலைநிறுத்தம்?

கோவை, ஆக. 14—

"அரசாங்க மின்சார இலாகாவைச் சேர்ந்த நேரடியாக இயக்கும் ஊழியர்கள் 4,000 பேர், 'வேலைநிறுத்தம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை' என்ற நிலையில், அதன் மத்திய குழுக் கூட்டத்தில், உடனடியாகக் குறைகள் தீர்க்கப்படாவிட்டால் வேலைநிறுத்தம் செய்வதென்று முடிவு செய்துள்ளனர் என்று தெரியவருகிறது.

## மக்கள் மறுமலர்ச்சி மன்றப் பொதுக்கூட்டம்

17—8—57 மாலை 6 மணிக்கு சென்னை வியாசர்பாடி முத்து முதலித் தெருவில் மேற்படி பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர் க. அன்பிற்கரசு தலைமை வகிப்பார்; தோழியர் சத்தியவாணிமுத்து எம்.எல்.ஏ., தோழர்கள் கண்ணதாசன், ஆர். ஜார்ஜ், வி. எஸ். கோவிந்தராசன் ஆகியோர் பேசுவர். டேப் இராதாமாணிக்கம் இன்னிசை வழங்குவார்.

# 'திராவிடம் தனிநாடாகாமல் இந்தியாவின் விடுதலை அத்தியாயம் முடிவுருது'

## 'ஆட்சியாளர் கேடான கொள்கைகளைப் புகுத்தினுல் தி. மு. கழகம் வாளாவிருக்காது'

## மதுரைசிறப்புக்கூட்டத்தில் அண்ணுகருத்துரை

"நாட்டின் விடுதலைக்காக எண்ணற்றத் தியாகிகள் பாடுபட்டிருக்கிருர்கள்; அப்படிப்பட்டவர்கள் எங்கே இருந்தாலும் அவர்களிடம் நான் மதிப்புக் காட்டுகிறேன். காங்கிரசுக்காரர்கள் என்பதற்காகவோ, பிராமணர்கள் என்பதற்காகவோ நான் அவர்கள்மீது வெறுப்புக் காட்டுவதில்லை.

"ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ள காங்கிரசுக்காரர்கள் புதிய கொள்கைகளைப் புகுத்தி, தமிழர்களின் நல்வாழ்விற்கு அவைகள் கேடு விளைவித்தால் தி. மு. கழகம் வாளாவிருக்காது. அடுத்த பத்து ஆண்டு காலத்திற்குள் அப்படிப்பட்ட சோதனை ஏற்பட்டால் பெரும் போராட்டத்தை தி. மு. கழகம் தொடங்கும்.

"திராவிட நாடு தனி நாடாகப் பிரிக்கப்படாமல் இந்தியாவின் விடுதலை அத்தியாயம் முடிவடையப் போவதில்லை. 1957-ஆம் ஆண்டு, தி. மு. கழகத்தினரை டெல்லிக்கு அழைத்து, 'உங்கள் பிரிவினைக் கொள்கைகள் என்ன? திராவிடம் பிரிந்தால் அதனுடைய அடுத்த நடவடிக்கை என்ன?' என்பன போன்ற சமரசப் பேச்சுத் தொடங்கி ஒப்பந்தம் செய்யக் கூடிய ஆண்டாகவும் இருக்கலாம்"

—என்று, அண்ணு அவர்கள், 11—8—57-ல், மதுரை பழனி டாக்கீசில் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார் :—

மதுரை வழக்கறிஞர் தோழர் எஸ். பார்த்தசாரதி (நாயுடு) அவர்கள், சிறப்புக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினர்.

'1967-ஆம் ஆண்டு, என்ற தலைப்பில் அண்ணு அவர்கள் பேசினர்; அப்போது மேலும் அவர் கூறியதாவது :—

''1967-ஆம் ஆண்டு' என்ற தலைப்பு நானுகப் பெற்றுக்கொண்டது அல்ல. சட்டசபையில் நிதி அமைச்சர் பேசுகையில், 'நாட்டுப் பிரிவினைக் கொள்கையைப் பத்து ஆண்டுக் காலத்திற்குத் தள்ளி வைத்துவிட்டு அரசாங்கத்துடன் ஒத்துழையுங்கள்' என்று குறிப்பிட்டதை வைத்து இத்தலைப்புக் கொடுத்திருக்கிருர்கள் என்று கருதுகிறேன்.

"'தி. மு. கழகத்தினர் சட்டசபைக்குச் சென்று என்ன சாதித்துவிட்டார்கள்? என்று சிலர் கேட்கிருர்கள். சட்டசபைக்குச் செல்வது என்றால் அமைச்சர்களோடு சண்டை போடுவதல்ல; புத்தகங்களையும், நாற்காலிகளையும் வீசி எறிவதல்ல; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக மத்திய அரசிடம் கேட்ட தொகையை பெறமுடியாமல் சக்தியற்று மாகாணத்தில் காங்கிரசு கட்சி இருக்கிறது என்ற உண்மையைச் சட்டசபையில் பலர் அறிய எடுத்துக் கூறியது தி. மு. கழகம்தான்.

"சென்னை மாகாணத்தின் பெயரைத் 'தமிழ்நாடு' என்று மாற்றவேண்டும் என்று தீர்மானம் கொண்டுவந்து, அத்தீர்மானத்திற்கு யாரெல்லாம் எதிர்ப்பாக வாக்களித்தார்கள் என்பதை மக்கள் அறியச் செய்தவர்கள் தி. மு. கழகத்தினர் தான்.

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்காகச் சென்னை மாகாணத்திற்கு ரூ. 400 கோடி வேண்டும் என்று முதலில் சென்னை அரசினர் மத்திய அரசைக் கேட்டனர்; ரூ. 400 கோடிக்காகத் திட்டமும் வகுத்தார்கள். ரூ. 400 கோடிக்குப் போட்டத் திட்டத்தை மத்திய அரசாங்கம் ரூ. 170 கோடியாகக் குறைத்தது; பின்னர் பணம் கொடுக்கும்போது ரூ. 150 கோடி என்ற அளவுக்குத் தேய்ந்துவிட்டது. வடநாட்டு அரசாங்கம் தென்னாட்டுக்காரர்களை மதிப்பதில்லை.

"1957-ம் ஆண்டில் சட்டசபையில் புகுந்த தி. மு. கழகத்தினர் 1967-ம் ஆண்டிற்குள் தங்களது குறிக்கோளைப் பெறுவதில் தோல்வியடைந்துவிட்டார்களானால், ஆப்பிரிக்க நாட்டு சிவப்பு இந்தியர்கள் அடைந்த கேவல நிலையைத்தான் தமிழர்களும் அடைய நேரிடும் என்று எச்சரிக்கிறேன்.

"சட்டசபைக்குச் செல்வதென்றால், முதலில் தான் தேர்ந்தெடுக்கப்பட்டத் தொகுதி மக்களின் நலனைப் பேண வேண்டும். இரண்டாவது தன் கட்சியினுடைய மூலாதாரக் கொள்கைக்கு, ஊறு ஏற்படாதவாறு சட்டசபையில் செயலாற்ற வேண்டும். இவ்விதக் கருத்துக்களை மனதில் வைத்துப் பார்த்தால் தி. மு. கழகம் சட்டசபையில் சாதித்துள்ள சாதனைகள் நன்ருகத் தெரியும்.

"சட்டசபைக்கு தி. மு. கழகத்தினர் சென்ற சில மாதங்களுக்குள்ளேயே மாகாண அமைச்சர்கள் பலரிடம் டெல்லி அமைச்சர்கள் ஐயம்கொள்ளத் தொடங்கிவிட்டார்கள். தமிழ்நாட்டு வரலாற்றிலேயே ஒரு புது யுகத்தை தி. மு. கழகம் ஏற்படுத்தியிருக்கிறது."

# கழகக் கூட்டம்

★

பாப்பநாய்க்கன்பாளையம்

திரு. வி. க. திடலில்

17—8—57 இரவு 7 மணிக்கு

பேசுவோர் :

ஏ. கோவிந்தசாமி எம் எல்.ஏ.

அ. இளம்வழுதி

நா. சுப்பையா

# ஏனே இந்த நிலை?

சென்னை நகரசபையில் பெருவாரியாகக் காங்கிரஸ் உறுப்பினர்கள் உள்ளனர். 'இந்த நகரசபை மிக மட்ட நிலைக்குத்தான் வந்திருக்கிறது' என்று நகர சபைத் தலைவர் வருத்தத்துடன் கூற வேண்டிய ஒரு நிலை சபைக் கூட்டத்தின்போது ஏற்பட்டதாகத் தெரியவருகிறது.

ஒரு உறுப்பினர் மற்றொருவருக்கு சிகரெட் தருவதைப் பார்த்து வேறொரு உறுப்பினர், 'இது என்ன நகரசபையா, சிகரெட் கடையா?' என்று கேட்ட போதுதான் தலைவர், வருத்தத்துடன் மேற்கண்டவாறு 'நற்சான்று' வழங்கினராம்.

## வேதனையும்-வேடிக்கையும்

சென்னை நகரசபையில் ஒரு உறுப்பினர் பேசிக்கொண்டிருந்த போது, இடையூறாக மற்றொரு உறுப்பினர் பேசிக்கொண்டிருந்தாராம்.

உடனே, பேசிக்கொண்டிருந்த உறுப்பினர் பொறுமையிழந்து, 'இந்தச் சபைக்கு இரண்டு தலைவர்களா?' என்று கேட்டாராம்.

இடையூறாகப் பேசியவரைத் தலைவராக ஏற்றுக்கொண்டால் மொத்தம் 20 தலைவர்கள்கூட இருப்பதாக மதிப்பிட வேண்டிய நிலை வரும்' என்று மேயர் வேடிக்கையாகக் கூறி, தான் ஒருவர் தான்; தலைவர் என்று உறுதிப்படுத்தினராம்!

# 'பொருளாதார விடுதலை கிட்டினலன்றி அரசியல் சுதந்திரம் பூரணமாகாது'

"மக்களில் ஒவ்வொருவருக்கும் குறைந்த பட்ச வாழ்க்கை வசதிகள் கிடைக்குமென்றும், வறுமையிலிருந்து முழு விடுதலைகிடைக்குமென்றும் உத்தரவாதம் செய்யக் கூடியபடி பொருளாதார சுதந்திரத்தை அடைவதற்கு நமக்கு வழி ஏற்படுத்தினல் அல்லாமல், அரசியல் சுதந்திரம் பூர்த்தியானதாக ஆகாது என்பதை நான் நினைவுபடுத்த விரும்புகிறேன்.

"இவ்வாறு அரசியல் விடுதலையிலிருந்து பொருளாதார விடுதலைக்கு மாறுவதென்றல் நாட்டின் நன்மைக்காக சொந்த நலன்களைத் தியாகம் செய்து, திடசங்கற்பத்தோடு முயற்சி செய்வது அவசியமாகும். சோதனைக் காலம் வந்துவிட்டது. ஒவ்வொரு குடிமகனும் தம் கடமையை உண்மையாகவும், அந்தரங்கச் சுத்தியுடனும் செய்வார்கள் என்று இந்தியா எதிர்பார்க்கிறது. இந்த அழைப்புப்படி நாம் செயலாற்றத் தவற மாட்டோம் என்பதில் எனக்கு யாதொரு சந்தேகமும் இல்லை"

இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர் இராசேந்திரப்பிரசாத் அவர்கள் விடுத்திருக்கும் சுதந்திர தினச் செய்தியில் காணப்படும் வாசகங்களே மேலேயுள்ளவை.

# பண்டித பந்தின் கண்ணோட்டத்தில்!

"பொருளாதாரத் துறையில் இந்தியா இப்போது சில தற்காலிகக் கஷ்டங்களை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிறது. வெளிநாட்டு நாணய வசதித் தட்டுப்பாடு இருந்து வருகிறது. உள்நாட்டுப் பண மார்க்கெட்டும் சற்று இறுக்கமாகவே இருக்கிறது.

"நாம் கொந்தளிப்பான ஒரு காலத்தில் வாழ்ந்துவருகிறோம். அரசியல் துறையிலாயினும் சரி—பொருளாதாரத் துறையிலாயினும் சரி—சமூகத் துறையிலாயினும்சரி—கிரந்தமாக அமைந்துள்ள ஒழுங்குமுறைகள் எல்லாம் நம்மைச் சுற்றி உடைந்து நொறுங்கி விழுந்துகொண்டிருக்கின்றன."

# இரயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம்?

செப்டம்பர் 29-ல் வாக்கெடுப்பு சம்மேளன மாநாட்டில் முடிவு

அகில இந்திய இரயில்வே தொழிலாளர் சம்மேளனத்தின் ஆண்டு மாநாட்டில், 'நேரடி நடவடிக்கைதான், சர்க்கார் கட்டவிழ்த்துவிட்டிருக்கும் சமூக பொருளாதார தாக்குதல்களிலிருந்து விடுதலை பெற ஒரே வழியாகும்' என்று முடிவெடுக்கப்பட்டிருக்கிறது.

சம்மேளனம் எல்லாக் கிளைச் சங்கங்களையும், வரும் செப்டம்பர் 29-ந் தேதியன்று, ஊழியர்களிடை வேலைநிறுத்த வாக்கெடுப்பு நடத்துமாறு கேட்டிருக்கிறது.

சம்மேளன மாநாடு, நேரடி நடவடிக்கைக்காக, ஒரு செயற்குழுவையும் நிறுவியுள்ளது.

# பீடித் தொழிலாளர் அறப்போர்

சேலம், ஆக. 14—

மூன்றுவது நாளாக இன்று பீடித் தொழிலாளர்கள் சேலம் மாவட்ட கலெக்டர் காரியாலய காம்பவுண்டு வாயில்களில் குறுக்கே உட்கார்ந்து கொண்டு மறியல் செய்தனர். 9 குழுக்களாக மறியல் செய்த மொத்தம் 117 பீடித் தொழிலாளர்களை இன்று சேலம் நகரப் போலீசார் கைது செய்தனர். அவர்கள் அனைவர்மீதும் இ. பி. கோ. 147, 447, 341, 353 பிரிவுகளின்கீழ் வழக்குப்பதிவு செய்யப்பட்டுள்ளது. 117 பேர்களையும் 10 நாட்கள்வரை சப்-ஜெயில் காவலில் வைக்குமாறு சேலம் டவுன் மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார். (ந—நி.)

# ஆரணி தி. மு. க. பொது உறுப்பினர் கூட்டம்

17-8-57 பிற்பகல் 2 மணிக்கு, ஆரணி தி. மு. க. கிளையின் பொது உறுப்பினர் கூட்டம், தொட்டி சுப்பராய செட்டி சத்திரத்தில் நடைபெறும்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

